ஸ்ரீ:

புதுவை விலக்ஷணகவி

# ஏ. வே. இராமாநுஜ நாவலர்

## சரித்திரச் சுருக்கம்.

வி. பூதூர் — புலவர்
கி. வேங்கடசாமி ரெட்டியார்
எழுதியது.

புதுச்சேரி
1958.



விலை காசு 25.

முதற்பதிப்பு { விளம்பி
1958

இந்நூல் புதுவை ஆனந்தரங்கப்பிள்ளை வமிசத்தவராகிய திரு. C. கிருஷ்ணசாமிப்பிள்ளை அவர்கள் பொருளுதவியினால் வெளியிடப்பெற்றது.



புதுவை விலக்ஷணகவி

ஏ. வே. இராமாநுஜ நாவலர்

ஸ்ரீ

புதுவை விலக்ஷணகவி

# ஏ. வே. இராமாநுஜ நாவலர்

## சரித்திரச் சுருக்கம்

---

### பிறப்பு

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தமிழையும் சமயத்தையும் காத்த பெரியோர்களுட் சிறந்தவர் **புதுவை விலக்ஷணகவி ஏ. வே. இராமாநுஜ** நாவலர் என்னும் பெரியோராவர்.

இவர் தென் ஆர்க்காடு ஜில்லா திண்டிவனத்தை அடுத்த **ஏப்பாக்கம்** என்னுமோரூரில் பலிஜ நாயுடு குலத்தில் **வேங்கடராம நாயுடு** அவர்கட்கும் **அலர்மேன்மங்கையம்மை**யார்க்கும் அருந்தவப் புத்திரராக கி. பி. 1831க்குச் சரியான விரோதி ஆண்டு பங்குனித்திங்களில் கேட்டைநாளில் தோன்றினர்.

### இளம் பருவம்

இவர்தம் இளவயதிலேயே தக்க நல்லாசிரியரை அடுத்துத் தமிழ்இலக்கண இலக்கியங்களிலும், வைணவ, சைவ, சமண, புத்தமத நூல்களிலும் நன்கு தேர்ச்சி பெற்றுர்.

இவர்தம் ஆசிரியர் இன்னுரென எக்குறிப்பானும் அறிய முடியவில்லை. இதனுல் இவர்க்காசிரியர் ஒருவரோ பலரோ என்றெண்ண நேர்கின்றது.

ஆசிரியர் ஒருவரே ஆக இருப்பின் இவர்தாமருளிய நூல்களில் எங்கேனும் ஓரிடத்திற்குறித்திருப்பரன்றே? அங்ஙன்

குறிப்பிட்டாரிலர். ஆகலின், இவர் பல்லிடங்கட்குஞ் சென்று ஆங்காங்குள்ள கற்ருர்பால் முறையாகப் பயின்றிருத்தல் வேண்டும்.

தம் 20-ம் வயதிலிருந்து சின்னுள் உபாத்தியாயராக இருந்திருக்கின்ருர். தமிழாசிரியரும் வித்துவானுமாகிய உயர்திரு **பா. மா. வேங்கடகிருஷ்ண பிள்ளை** யவர்கள் புதுவையில் இவர்பால் "அஷ்டப்ரபந்தம்" பாடங்கேட்டதாகத் தெரிகிறது.

அன்றியும் தம் சிறுவயதிலேயே முதன் முதலாக இவரான் எழுதப்பெற்றதும், கி. பி. 1863-ல் அச்சிடப்பெற்றதுமான **புருஷார்த்த தீபிகை** எனும் **பாலசம்வாத விஞவிடை**யின் முகப்பில் "இது ஏ. வே. இராமாநுஜ வுபாத்தியாயர் அவர்களாற் செய்யப்பட்டது" என்றிருத்தலின் இவர்தம் இளவயதிலேயே புதுவையிற் குடிபுகுந்து உபாத்தியாயராக இருந்து தக்க பல மாணவர்கட்குத் தமிழ்ப் பாடஞ் சொல்லி வந்திருக்கின்றனர் என்பது உறுதியாகின்றது.

இவர்பாற் கற்ற சைவப் பெருமக்களும் பலர் உளர்.

பிற்காலத்து அச்சிடப் பெற்ற புராணங்களிலும் புத்தகங்களிலும் புதுவை ஏ. வே. விலக்ஷணகவி இராமாநுஜ நாவலர் என்றிருப்பது போலன்றி இப் பால சம்வாத விஞவிடையில் ஏ. வே. இராமாநுஜ வுபாத்தியாயர் என்று மட்டும் இருத்தலின், இக்காலம் இவர் புதுவையில் வந்து தங்கிய ஆரம்ப காலமாயிருத்தல் வேண்டும்.

புதுவையிலேயே நிலையாகத் தங்கிய பின்னர்தான் "புதுவை ஏ. வே. விலக்ஷணகவி இராமநுஜ நாவலர்" என்று புதுவை என்னும் மாநகரையும் தம் பெயர்க்கு முன்னர்ச்சேர்த்து எழுதுதல் வழக்கமாயிருந்திருத்தல் வேண்டும்.

ஆகலின், புதுவை மாநகர்க்கு நம் நாவலர் பெருமான் எழுந்

தருளிய காலம் தம் 25வது வயதிலிருந்து 30ம் வயதிற்குள்ளாக இருக்கவேண்டும். (கி. பி. 1856 முதல் 1861 வரை).

## பாலசம்வாத வினு விடை

இந்நூலே இவர், தம் இளம்பிராயத்திலேயே எல்லாச்சமயத்தவர்க்கும் இசையும்படி தம் கல்வி அறிவாற்றல்கள் தோன்றத் தகுந்த மேற்கோள்களுடன் எழுதினர். இஃது ஆத்திகத்தைப் பரப்பவும் நாத்திகத்தை ஒழிக்கவும் வல்ல ஓர் அருமையான வசன நூலாகும்.

இந்நூற்கண், மேற்கோள்களாகத் திருக்குறள், நாலடி, கம்ப ராமாயணம், பாரத நூல்களினின்றுமட்டுமின்றிச் சைவ நூற்களினின்றும் பெரும்பாலான செய்யுட்களே எடுத்தாண்டுள்ளார்.

இந்நூல் எழுதுங்காலத்திலேயே இவர்க்குக் கவி பாடும் திறனும் இருந்திருக்கின்றது.

இஃது இந்நூற்கண் மேற்கோள்களாக எடுத்துக்காட்டும் பாக்களின் வரிசையில் இவர்தாமே சில பாக்கள் எழுதி ஆங்காங்குச் சேர்த்து "என்றேருத்தமப் பாவினும்" என்ருளுதலின் அறியலாம்.

அஃதெங்ஙன மெனின், இந்நூலில் மேற்கோள்களாகக் காட்டும் பாக்கள் எதிலுள்ளன என்பதைச் சுட்டிச் செல்லும் இவர் தாமே எழுதிச்சேர்த்த பாக்களுக்கு மட்டும் "என்றேருத்தமப்பாவினும்" என்றுமட்டுமெழுதி இடங்குறியாது விட்டதோடன்றிப் பின்னுளில் இவர்தாமருளிய திருச்சித்திர கூடப் புராணம், திருமுட்டப் புராணம் இவைகளில் இப்பாக்களேச் சேர்த்துமிருக்கின்ருராகலி னென்க.

இதனன் இவ்விளம் பிராயத்திலேயே மிக அழகாகக் கவி பாடுந்திறன் உற்றிருந்தார் எனல் உறுதியாகின்றது.

பின்னர், வரவரப் பதிகங்களும் அந்தாதிகளும் மாலைகளு மாகச்சில்லரைப் பிரபந்தங்கள் அளவின்றி எழுதி மிகப் பயிற்சி பெற்ற பின்னரே இவர், 'விலக்ஷணகவி' எனவும் 'நாவலர்' எனவுங் கற்றோர் பலரும் புகழக் கவினுற விளங்கினர் என்பது போதரும்.

## திருமணம்

இச்சமயத்துப் புதுவையம் பதியில் நம் நாவலர் பிரானுக்குத் திருமணம் நடந்தேறியிருத்தல் வேண்டும். இப்பெருமானது வாழ்க்கைத் துணைவியார், 'எவ்வூரினர்' 'எப்பெயரினர்' 'எவ்வி யல்வினர்' என அறியத்தகுந்த குறிப்பு ஒன்றும் கிடைத்திலது. எனினும் இவ்வம்மையார், இப்பெருமான் திருவுள்ளத்திற் கியைந்தொழுகும் கற்பு வாய்க்கப் பெற்றவராய் இருந்திருத் தல் வேண்டும் என அறியலாம்.

## புத்திரப் பேறு

இந்நாவலர் பிரானுக்கு *ஸ்ரீ சடகோப நாயுடு* எனப் பெய ரிய ஒரு புதல்வர் இருந்தனர். இவரும் தம் திருத்தந்தையார்பால் நன்கு ஓதி உணர்ந்தவர் எனத் தெரிகின்றது. இவர், கவிபாடும் திறமையைப் பெற்றவரென்பதைத் திருச்சித்திரகூடப்புராணம், சுதரிசனகிரிபுராணம் இவற்றிலுள்ள இவரானியற்றப் பெற்ற சிறப்புப் பாயிரங்களான் அறியலாம்.

## சமயத் தொண்டு

வைணவசமயமாகிய தமது சமயத்து முதன்மையுள்ள ஆழ்வார்கள் அருளிச்செயலில் ஈடுபட்டு, முன்னோர்களின் அரு மறை நூற் (இரகஸிய கிரந்தங்) களையும் கற்றுணரத்திருவுளங் கொண்டு, தம் வழிக்குரவராகிய திருக்கோவலூர் நிரந்தரம் புனிதராய *சீனிவாசதேசிகர்** எனும் சீயர் பாற்சார்ந்து வண ங்கி, அப்பெருமானரால் ஐந்திக்கை (பஞ்ச சம்ஸ்காரம்) அரு ளப் பெற்றார்.

* எம்பெருமானார் ஜீயர் மடாதிபதி.

பின்னர் ஸ்ரீ வானமாமலை பரமஹம்ச ஸ்ரீபட்டர்பிரான் ஜீயர் என்னும் அடிகளார் திருமுன் சகல சம்பிரதாயார்த்தங்களையும் ஐயந்திரிபற ஓதி உணர்ந்து, ஒழுக்கத்தானும் உயர்ந்து, கண்டாரான் மதிக்கற்பாடுடையராய் வைணவப் பெருந் திருவொடு விளங்கினர்.

## சென்னை முடிச்சூர் அப்பாவு முதலியார் என்னும் பெரியாரின் கூட்டுறவு

சென்னையில் சிறப்புற்றுப் பெருந்திருவொடு இக்காலத்து விளங்கியவர் முடிச்சூர் அப்பாவு முதலியார் எனும் பெரியர். இவர் வைணவச் செல்வர். பிறர் துன்பங்கண்டு 'ஐயோ' என்றிரங்கும் இயல்பினர். உடல், பொருள், ஆவி மூன்றினையும் வைணவப் பெருந்தொண்டிற்கே அளித்தவர்.

தம் காலத்தே அச்சியந்திரம் தோன்றிச் சைவ சமய குரவர்களருளிய தேவார திருவாசகங்கள் அச்சில் வெளிவந்தும் ஆழ்வார்களருளிச் செயல்களாகிய "நாலாயிர திவ்ய ப்ரபந்தம்" அச்சில் வெளிவராமை கண்டு, அதனைத்தாமே அச்சில் பதிப்பிக்கலாம் எனத்திருவுளங்கொண்டு, தக்க அந்தணர்பாற் சென்று தங்கருத்தைத் தெரிவித்தனர்.

இதனைக் கேள்வியுற்ற அவ்வந்தணப் பெருமக்கள் "நாலாயிர திவ்ய ப்ரபந்தம்" எனும் அரும்பெரு நூலானது, "ஓர் இரகசியகிரந்தம்" ஆகலின், அதனை 'ஓராண் வழி' எனும் பரம்பரை மூலம் கேட்டுணர்தல் வேண்டுமேயன்றி, அச்சு மூலம் வெளிக்கொணர்தல் தகாது எனவும், கொணரின் அதன் பெருமதிப்பொழிந்துபடும் எனவும் கூறி மறுத்துவிட்டனர்.

இதனைச் செவியுற்ற இவர் இப்பிரபந்தம் முழுதும் வேறு குலத்தினர்பாற் கிடைப்பதரிதாகலானும், அவ்வந்தணப் பெருமக்களிடமிருந்தே பெறவேண்டுதலானும், அவர்கள்தாம் தங் கருத்துக் கிசையாமையானும் மிகவும் மனம் நொந்தவராய்

என் செய்யலாம் என ஆராய்ந்து கலங்கிய உள்ளத்தராய்ப் பின் ஒருவாறு தேறி ஒரு வழி கண்டுபிடித்தார்.

அதன்படி, பணச்செலவைக் கருதாமல் அவ்வந்தணப் பெருமக்கட்கு அளவின்றி பெருந்தொகையீந்து ஒருவர்க்கொருவர் அறியாதபடி பல்லோரிடத்தும் சென்று, அவ்வவர்கள் வாயில் காத்துப், பகலென்றும் இரவென்றும், மழையென்றும் வெயிலென்றும் பாராமல் மிகுந்தசிரமப்பட்டுப் பொதுவாகத் தமிழுக்கும் சிறப்பாக வைணவர்கட்கும் ஒரு பெருங் கருவூலமாகிய 'நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தை' உருவாக்கி அச்சிட்டு வெளிப்படுத்தினரென்ப.

அக்காலையில் இப்பெரியாருக் குற்றதுணையாக ஊன்று கோல் போலிருந்து விளங்கியவர்கள் *நம் நாவலர் பெருமா*னும் ஶ்ரீ இருப்புத்தலை ஏகாங்கியார் எனும் அடிகளும் ஆவர்.

இவர்கள் இன்றேல் இப்பெருநூல் அப்பொழுது வெளி வந்திராது எனவும், ஆகலின் இப்பிரபந்தத்தைத் தொடும்பொழு தெல்லாம் இம் மூவரையும் நினைந்து தொழுத பின்னரே தொடுதல் வேண்டுமெனவும் இதனையுணர்ந்த பெரியோர் பணிப்பர்.

## புதுவையும் பொன்னரங்கம் பிள்ளையும்

புதுவையைக் கற்றவர் வாழும் புதுவைமாநகர் என்பதைக் காட்டினும், கற்றவரை ஆதரிக்கும் வள்ளல்கள் வாழ்ந்த புதுவைமாநகர் என்றெடுத்துச் சொல்வதுதான் அந்நகரின் சிறப்பை நன்கு விளக்கும். அப் புதுவைமாநகர் கடற்கரையை அடுத்துளது; கண்டார் மனத்தைக் கவர்வது; ஒழுங்கான தெருக்களையுடையது; பல்குல மக்களும் மல்குற விளங்குவது; கோயில்கள் பலவற்றுனும் குலவுவது; அறிஞர்களும் அன்னிய நாட்டினரும் ஆர்ந்த சிறப்பினது.

அத்தகு புதுவைமாநகரின்கண் பெருங் கொடைவள்ளலும் புலவர்தம் புரவலரும், சிறந்த அறிஞரும், பக்திப் பெருஞ் செல்வரும், பெரும்பதவி வகித்தவரும் யாதவகுலச் செம்மலும் ஆகிய ஆனந்தரங்கம் பிள்ளையவர்களின் குலத்தவரும், எக் குலத்தவரானும் நன்கு மதிக்கற்பாடுடையரும், வைணவத் தொண்டே மாண்பார் தொண்டெனக் கொண்டவரும், அடியார்களைக் கண்டால் அத்திருமாலே இவர்களென வணங்கி ஆதரித்து அன்பொடு வழிபடுபவரும் ஆகிய ***லோக-பொன்ன ரங்கம் பிள்ளை*** என்னும் வள்ளலொருவர் வாழ்ந்திருந்தார்.

இவ் வள்ளற் பெருமான், நம் நாவலர் பெருமானைப் பன்னெடு நாட்களாகவே உன்னிப்பாகப் பார்த்து, இப் பிரானலேயே உய்யக்கூடுமென் றுளங்கொண்டவராய் இவரைச் சார்ந்து வணங்கித் தம் உட்கோளைத் தெரிவித்து, இவர்க்கு வேண்டியன யாவுமளித்து, இப்பெருமானுர்க் கொருகுறைவு மின்றிப் புதுவையிலேயே எப்பொழுதும் தங்கியிருக்கும்படி ஏற்பாடு செய்தனர்.

இப் பரோபகாரி அவர்களாற்றுன் ***ஸ்ரீபாத்மோத்தர புராண***மெனும் அரிய நூல் வெளிவந்தது.

## நாவலர் எழுந்தருளியிருந்த திருமாளிகை

புதுவைமாநகரில் பெருமாள் கோவில் வீதியில் 37-ம் எண்ணுள்ள திருமாளிகையில் இவர் எழுந்தருளியிருந்தார். இவர்க்குப் பின்னும் இத் திருமாளிகையிலேயே இவர் திருக்குமாரர் ஸ்ரீ சடகோப நாயுடு அவர்களும் வசித்து வந்திருக்கின்ருர். இத் திருமாளிகை மேல்மாடியை யுடையதென்றும், அம் மாடியிலேயே நம் பெருமான் எழுந்தருளியிருந்தாரென்றும், சொற் பொழிவுகள் (காலக்ஷேபங்கள்) கூட அங்கேயே நடந்தன என்றும் தெரிகின்றது.

# ஸ்ரீபாத்மோத்தர புராணமும், பொன்னரங்கம் பிள்ளையும்

வைணவ அடியார்களுட் சிறந்தவரும் பெருவள்ளலுமாய பொன்னரங்கம் பிள்ளையவர்களின் வேண்டுகோளானும், திருக்கோவலூரில் எழுந்தருளியிருந்த தம் ஞானாசிரியரது நியமனத்தானும், வடமொழி வல்ல அந்தணர்தம் உதவியானும், கற்றோரும் மற்றோரும் வியப்புறக் காப்பிய இலக்கணங்கள் நிரம்ப *ஸ்ரீபாத்மோத்தர புராண*த்தைத் தமிழில் 4123 திருவிருத்தப் பாக்களால் நம் நாவலர் பிரான் செய்தருளினர்.

இவர் அருளிய பாவகை நூற்களில் இப் புராணமே மிகச் சிறந்ததாம். இப் புராணத்தைக் கற்றூர் மிகுந்த காஞ்சியம் பதியில் ஸ்ரீ வைகுண்டநாதன் சந்நிதியில் கி. பி. 1870க்குச் சரியான சுக்கில ஆண்டு வைகாசித் திங்களில் "தொல்லை வேதத் தூமொழியிரண்டினுள் — வல்லவர்மல்கு நல்லவை நடுவண் — அன்னவர் சிந்தைக் கமுதென" அரங்கேற்றினர்.

இந்நூல் வடமொழியினின்று மொழிபெயர்க்கப்பட்டது. இவரே தாமாகக் கூறிய தொன்றல்ல.

இதன் அருமை பெருமைகளையுணர்ந்த சைவப் பெருமக்களான சருவகலாசாலைத் தமிழ்த் தலைமைப் புலமை நடாத்திய இயற்றமிழாசிரியர் கி. விசாகப் பெருமாளையரவர்களும், இயற்றமிழாசிரியர் புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்களும் இந்நூற்குச் சிறந்த சிறப்புப்பாயிரங்கள் அளித்தனரென்பதிலிருந்து இந் நூலின் சிறப்பு எத்துணையதென்பது விளங்கும்.

இன்னம் இவர் காலத்துச் சிறந்த இலக்கணப் புலவர்களெனப் போற்றப்பெறும் வைணவப் புரவலர்களாகிய கோமளபுரம் மகாவித்துவான் இராஜகோபாலபிள்ளையவர்களும் வித்வஜ்ஜன சேகரராகிய திரிசிரபுரம் கோவிந்த பிள்ளையவர்களும், பெரும் புலவர் பள்ளிகொண்டான் பிள்ளையவர்களும் இந்நூலை உச்சிமேற்கொண்டு நம் நாவலர் பிரானையும், இவரை ஆதரித்து இப் புராணத்தை அச்சிலிட்டு வெளிப்படுத்திய வள்ளல் பொன்னரங்கம் பிள்ளையவர்களையும் போற்றிப் புகழ்ந்திருக்கின்றார்கள். இவற்றை அவர்களியற்றிய சிறப்புப்பாயிரங்களாலறியலாம்.

தம்மை யாதரித்த சடையப்ப வள்ளலைக் கம்ப நாடரும், வரபதியாட்கொண்டானெனும் வள்ளலை வில்லிபுத்தூராழ்வாரும், சந்திரன் சுவர்க்கியெனும் வள்ளலைப் புகழேந்தியாரும் தம் அழியா நூல்களில் வைத்துக் கொண்டாடியவண்ணமே, நம் நாவலர் பெருமானும் இப் பாத்மோத்தர புராணத்தில் தக்க இடங்களில் இப் பொன்னரங்கம் பிள்ளையைக் கொண்டாடியிருக்கின்றார். இஃது இவரது நன்றியறிவைப் புலப்படுத்தும்.

இன்னம், புதுவை அவொக்கா தாண்டவராயபிள்ளை குமாரர் சோதிடம் அப்பாசாமி பிள்ளையவர்கள் செய்த

*முன்னாளிற் கம்பனிரா மாயணத்தைச்*
*சடையனிசை முன்னிச்சொன்னான்*

*பின்னாளி லாட்கொண்டான் மகிழவில்லி*
*பாரதத்தைப் பெருகச்செய்தான்*

*இந்நாளிற் பொன்னரங்கன் புகழோங்கப்*
*பதுமோத்ர இயல்புராணம்*

*எந்நாளுங் கலைஞர்கூட் டுணராமா*
*நுசக்கவிஞ னிசைத்தான்மன்னோ!*

என்ற சிறப்புப்பாயிரத்தானும் பொன்னரங்கம் பிள்ளையின் மேன்மையை அறியலாம்.

பொன்னரங்கம் பிள்ளை நம் நாவலர் பிரானை எவ்வணம் ஆதரித்தனர் என்பதைக் கீழ்க்கண்ட பாடலான் ஊகித்துணரலாம்.

“ அருங்பெரும்புதுவை யாதவகுலத்தி
லெழுந்தபொன்னரங்களை யமர்ந்த
பெரும்புகழ்த்திருமா லடியரைக்காணிற்
பெட்புடனெழுந்தடி பணிந்தெம்
திரும்பருமடிகா ளெழுகவென் றுருகித்
திகழ்விழி பொழிநன்னீர்திகழ
இருமென இருந்தன் னவருளப்பொருள்க
ளீந்திசையுற்றவ ரிவரே. ”

( ஸ்ரீபாத்மோத்தர புராணம், திருவயோத்திநகரப் படலம்
274-ம் பாடல். )

இன்னம், இப்பிள்ளையவர்கள் திருமால் முகமலர்த்திக் கேதுவான கைங்கர்யங்கள் பலவற்றையுஞ் செய்து அத் திருமாலையே இடையருதெண்ணித் தம் இதயபீடத்தில் அமர்த்தியவர் என்பது தோன்றக் கீழ்க்கண்ட பாடலான் நம் நாவலர் பிரான் இவரை எடுத்தாளும் திறம் வியக்கற்பாலது.

“ பன்மணி பதித்த பீடிகைமீதிற்
பரமனும் பத்தினிதானும்
நன்மயக் களிப்பின் வீற்றிருந்திடுத
லிடினவையறு மார்த்தி
மன்னிய நாவலோருள நிகர்த்த
மாசறுபொன் னரங்கன்றன்
சொன்னய விதயகமல பீடிகைமேற்
சுகித்துவீற் றிருத்தலைப்பொருவும்.”

(ஸ்ரீபாத்மோத்தர புராணம், திருக்கல்யாணப் படலம். 56-ம் பாடல்)

# ஸ்ரீபாத்மோத்தர புராணத்திற் சில நயங்கள்.

திருக்குறள், நாலடி, கம்பராமாயணம், நைடதம் முதலிய நூல்களினின்று சிறந்த கருத்துக்களை எடுத்து இவர் இந்நூலில் திறம்பட ஆண்டிருக்கின்றார்.

*நரமடங்க லெழுந்த படலத்*துள்ள இரணிய பிரகலாதனார்களுடைய பேச்சுவார்த்தைகள், ஆத்திகர்க்கும் நாத்திகர்க்கும் நடைபெறும் பேச்சுவார்த்தைகளைப்போ லமைந்திருப்பது அறிஞர்கட்கு நல்விருந்தாகும்.

ஓரிடத்துப் பிரகலாதனன், இரணியனை நோக்கி, நம் குலத்தை அழிக்கும் கடவுட் கறிவிலையென்றாய்; நம் குலத்துள்ள தீயரை அழித்தலும் உணர்ந்து நோக்கின் அதுவும் அவனதின்னருள் எனவே முடியும். அஃதுணராது அக்கடவுட் கறிவிலையென்பது; பெரிய ஆலமரத்தினுக்கு அதற்கேற்ற பெரிய பூசனியை யமைக்காது மிகச்சிறு பழத்தையமைத்த அக்கடவுட்கு ஞானமே இல்லை என்பானுடைய கூற்றை யொக்கும் எனுங் கருத்தமைந்த

"அரசுதீயரை யொறுக்கி னஃதுதண ணருள தென்றே
பரசுவ ரறிஞர்நீயோ பரற்கறி விலையென் றுன்னல்
புரைசெறி சிதடன்வீழ்க்குப் பூசனி பொருத்தல் செய்யாத்
தரைசெறி பரற்கு ஞானஞ் சற்றெனுந் தரத்தையொக்கும்,"

என்ற பாடல் நமக்கு மிகவும் இன்பூட்டுவதாகும்.

சில பூர்வாசார்யர்களின் பெயர்கள் தொனிப்பொருளாகத் தோன்றுமாறமைத்த "கோவியர் துருவு படலத்"துள்ள சில பாடல்கள் ஓதுந்தொறும் இன்பூட்டுவதாகும்.

"பரத்துவ சோதனைப் படலத்"துள், இறைவன் தன்னைத் தாக்கிய முனிவரரின் திருவடிப் பெருமையை விளக்குமுறையில் வரும்,

"தொல்லை மாதவத் தொன்றிய தோமிலார்க் கன்றி
நல்ல மாதவர் நளினப் பொற்பத நணுகுறுமோ
வல்ல மேலவர்க் கல்லது வரவர முனிதாள்
சொல்லு மாட்சிமை சொல்லவும் வருங்கொலோ சொல்லீர்?"

என்ற பாடலில் ஸ்ரீவரவரமுனி (ஸ்ரீ மணவாளமாமுனி) களுடைய தாளின் மாட்சிமை யாவரானும் சொல்லமுடியா தென்னும் தொனிப் பொருளின் நயம் கற்றூர் நெஞ்சை விட்டகலாது.

"குல்லை வனமடைந்த படலத்"துள், யசோதை "ஊரிலுள்ள பிள்ளைகளைக்கூட்டி, நீங்கள் ஒன்று சேர்ந்து நமதகத்திளம் புனிற்றுக் கன்றுகளை இனமொடு மேய்த்திர்" என்றுள். அதுகேட்ட அவர்கள், தாயார் சொற்கேட்பது அறமல்லவோ என்றவ்வண்ணமேசெய்து மிக்க உவகையுற்றன ரெனுமிடத்து; வயது முதிர்ந்தவர்களை அவ்வையெனச் சொல்வது வழக்காதலின், அச்சொல்லான் "மூத்தோர் சொல் வார்த்தை அறம்" என்றும், தொனிப் பொருளாக "அவ்வை சொல்லறம்" என்றும் நயம் தோன்ற வருதல்,

"அவ்வைசொல் லறமன்றோஎன் றகங்குளி ரடையக்கொண்டு"

என்ற தொடரான் உணரத்தகும்.

## அழுக்காறுற்ற சில்லோர் செயல்

அன்பர்களின் வேண்டுகோட் கிணங்கி நம் பெருமான் தமிழ்நாடெங்கணு மெழுந்தருளிச் சமயச் சொற்பொழிவுகளும் புராணச் சொற்பொழிவுகளும் நடாத்தி, "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போலவன் பேருந்தார்களுமே பிதற்றும்"படி செய்து, ஆத்திகத்தைப் பரப்பி, "நாவலர்" என யாவரும் போற்ற மிக்க சிறப்பொடு விளங்கினர்.

இந்நாட்களில் ஓர் நாள் வளவனூர் குமாரபுரியில் ஒருவர் இவர்முன் வந்து "திருக்கழுக்குன்றத் தந்தாதி" யில்

"காணியுங் காணியுங் காணியுங்காட்டுங் கழுக்குன்றமே"

என்ற ஈற்றடியுள்ள செய்யுளைக்காட்டி இப்பாட்டிற்குப் பொருள் சொல்லவேண்டுமென வற்புறுத்தினர்.

இவர்தம் மனக்கருத்தறிந்த நம் பெருமான், நூறு பாட்டுள்ள இவ்வந்தாதியில் இப் பாடலொன்றுக்குத்தான் நீர் பொருளறிந்திரில்லை; மற்றைய பாடல்கள் யாவிற்கும் பொருளறிந்துளீர்போலும். ஆகலின் எமக்கு மற்றைய பாடல்கட்கு நீர் பொருள் சொல்லின், யாம் உமக்கு இப்பாடலை விளங்கக் கூறுவேம் என்றனர்.

இதனைச் செவியுற்ற அவர், ஒன்றுந்தோன்ருது திகைத்து வேறுவழியின்றி வாளாபோயினர் என்ப.

பின் ஓர் சமயம் "வைதிக சைவசண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சூளை **சோமசுந்தர நாயகர்** அவர்கள், தாம் எழுதிய "***பாஞ்சராத்திர மதசபேடிகை*** அல்லது ***சைவ சூளாமணி*** எனும் நூலில், நம் நாவலர் பெருமானையும் ஆழ்வாராசார்யர்களையும் தம் மனப்போக்கின்படித் தாக்கியெழுதி அந்நூலை வெளியிட்டனர்.

அதைக் கடைக்கணித்த நம் நாவலர் பெருமான் அந்நூற்கணுள்ள புன்மொழிகளை யெடுத்து, சென்னபட்டணம் பிரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் வழக்குத் தொடுத்ததும், அதற்கு நாயகர், நம் நாவலர் பிரானுக்கு நூறு ரூபாய் கொடுத்து மன்னிப்பும் எழுதித்தந்தனர் என்பதும் தமிழுலகம் அறிந்ததொன்றும். *

---

* *சென்னபட்டணம் டவுன் பிரஸிடென்சி மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் 1890-ஆம் ௵ கேலண்டர் 22349-ஆம் நெம்பர் பிராது மன்னிப்புப் பத்திரத்தில் வாதி பிரதிவாதிகளுடன் வக்கீல்களும் கையொப்பமிட்டிருக்கின்றனர்.*

விக்கிரக ஆராதனை கூடாதென்கிற பிருமசமாஜம், ஆரிய சமாஜம் இவற்றைச் சேர்ந்தவர்களால் சில திருக்கோயில்களில் திருவிழாத் தடையுற்றிருந்தபோது, திருப்பாதிரிப்புலியூர் போன்ற நகரங்களில் பலப்பல சொற்பொழிவுகள் நடாத்தி அடியார்களை மகிழச்செய்து, திருவிழாத் தடைப்பட்டிருந்த திருக்கோயில்களில் பழையபடியே திருவிழா நடைபெறும்படி செய்தருளினர்.

## சில மேன்மைக் குணங்கள்

இவரின் அற்புதமான பேச்சுத்திறனுல் எதிரிகள் ஒன்றும் சொல்ல இயலாமல் அப்போது வாளாபோய்விடுவதும், பின்னுல் யாதேனும் தம் பிறவிக் குணத்தாற் சொல்வதுமாக இருப்பர்களேயன்றித் தக்க நன்முறையின் இவரை எதிர்த்து வெற்றி பெற்ருர் ஒருவருமிலர்.

எனினும், யாரையும் புண்படப் பேசும் வழக்கம் இவர்க்கு ஒரு சிறிதும் கிடையாது.

வைணவ சமயத்துள்ள தென்கலை வடகலை எனும் இரு பிரிவில், தாம் தென்கலையைச் சேர்ந்தவராயினும், வடகலையார்க்கு முதல்வராகிய ***ஸ்ரீ தேசிகனைத்*** தாம் எழுதிய அத்தனை புராணங்களினும் துதித்துள்ளார். ***தேசிகன் திருப்பதிகமும்*** தனியாக ஒன்றெழுதியுள்ளார்.

ஸ்ரீ பெருந்தேவித்தாயார் பதிகத்தையும் ஸ்ரீ தேசிகன் பதிகத்தையும் சேர்த்துப் புதுவை பொன்னரங்கம் பிள்ளையவர்களைக்கொண்டு 1867ல் அச்சிட்டு வெளிப்படுத்தினர். அப்பதிகங்கள் ஒவ்வொன்றின் முகப்பினும் வடகலைத் திருமண் அச்சிட்டிருக்கின்றர். அன்றியும் ***ஸ்ரீ வைணவ மங்கையர் வாழ்க்கைப்பா***டெனும் சிறுநூலில்,

> “ *தாமரை மலர்போலும் சந்திரப் பிறைபோலும்*
> *தவளவெண் மண்ணைநெற்றி தனிலிட வேண்டுமாம்.*”

என்று இருகலையினையும் குறிப்பிட்டிருக்கின்றர்.

இதனுன் இந்நாவலர் பிரானது நடுநிலைக் குணனும் சீரிய ஒழுக்கமும் நன்கு புலனுகின்றன.

## தலபுராணங்கள்

திருச்சித்திரகூடப் புராணம், திருமுட்டப் புராணம், சுதரிசனகிரி புராணம் எனும் இம்மூன்றும் நம் நாவலர் பெருமான் தம் வாழ்க்கையின் பிற்பகுதியில் எழுதிமுடித் தருளினர்.

திருமுட்டப் புராணத்தில் ஸ்ரீ கீதாபடனப் படலத்தில் வேளாண்குல திலகராய குறிஞ்சிக்கொல்லை முருகப்பிள்ளை என்பவரைப்பற்றி நாவலர் பிரான் குறிப்பிட்டிருக்கின்றூர்.

திருமுட்டப் புராணமும், திருச்சித்திரகூடப் புராணமும் வலயமாதேவி பெருமாள் கோயிலில் கி. பி. 1884-ம் ஆண்டிலும் சுதரிசனகிரி புராணம் திருக்கோவலூர் ஞானசிரியர் முன் னிலையில் கி. பி. 1885-ம் ஆண்டிலும் அரங்கேற்றப்பட்டன.

## இவர் செய்த நூல்களாவன :-

*பதித்த நூல்கள்.*

1. ஸ்ரீபாத்மோத்தர புராணம்
2. திருமுட்டப் புராணம்
3. திருச்சித்ரகூடப் புராணம்
4. ஸ்ரீ சுதரிசனகிரி புராணம்
5. பாலசம்வாத வினுவிடை
6. ஸ்ரீ வைஷ்ணவ தத்துவம்
7. வைராக்ய சூர்யோதயம்

8. தேசிகன் திருப்பதிகம்
9. மணவாளமாமுனிகள் திருப்பதிகம்
10. ஸ்ரீ எதிராஜ சதகம்
11. ஆழ்வார் பஞ்சரத்தினம்
12. பெருந்தேவித்தாயார் திருப்பதிகம்
13. ஸ்ரீ வரதராஜப்பெருமாள் திருமாலை
14. ஸ்ரீ வரதராஜப்பெருமாள் பதிற்றுப்பத் தந்தாதி
15. பகவந்நாம சங்கீர்த்தனம்
16. போற்றித் திருப்பதிகம்
17. ஸ்ரீமத் தொண்டரடிப்பொடியாழ்வார் பிரபாவம்
18. ஸ்ரீமத் பேரன்கூரத்தாழ்வான் பிரபாவம்
19. ஸ்ரீ வைணவ மங்கையர் வாழ்க்கைப்பாடு
20. ஆண்டாள் விஷயம்
21. ஸ்ரீ சூர்ண விளக்கம்
22. அரிதூஷண கபோலசபேடிகை
23. சச்சம்ப்ரதாய தரளமாலிகை.

*அச்சில் வாராதன.*

1. சாந்த பூஷண சம்புடம்
2, விலேமாதர் விளக்கம்
3. ஸ்ரீ வைஷ்ணவ கம்பீரஜோதி
4. தினசர்யாம்ருத தடாகம்
5. திருவேங்கடக்கோவை
6. திருக்கோவலூர் தேகளீசன் கலம்பகம்
7. திருக்கோவலூர் ஆயனுர்பிள்ளைத் தமிழ்
8. விக்ரகாராதனை விளக்கம்

முதலியன.

## சிறந்த நூல்கள்

இவர் எழுதிய புராணங்களுட் சிறந்தது

*ஸ்ரீபாத்மோத்தரம்.*

வசன நூல்களுட் சிறந்தது

*பாலசம்வாத விஞவிடை.*

சம்பிரதாய வசன நூல்களுட் சிறந்தது

*வைராக்கிய சூர்யோதயம்.*

பக்தியை விளக்கும் கீர்த்தனங்களுட் சிறந்தவை

*பகவந்நாம சங்கீர்த்தனமும்,*
*வைணவ மங்கையர் வாழ்க்கைப்பாடும்.*

இவற்றுள் பகவந்நாம சங்கீர்த்தனம் எனும் கீர்த்தனை நூல் சிறுசிறு கிராமங்களிலும் மூலைமுடுக்குகளிலும் பரவி ஆங்காங்கு பஜனை மண்டபங்கள் எழுப்பி யாவரும் மனமுருகிப் பாடும்படி இருந்ததென்பதை உணரின் அதன் எளிமையும் நயமும் பக்திச்சுவையும் எத்துணைத்தென்பது நன்கு விளங்கும்,

## சில அரிய நிகழ்ச்சிகள்

புதுவையில் தமது திருமாளிகையிலேயே சுகபிர்ம்ம (கிளியுருவுள்ள) முனிவர் அருளிய ஸ்ரீமத் பாகவதச் சொற்பொழிவு நடைபெற்றுவரும்போது நாடோறும் அவ்வேளையில் ஒரு கிளிவந்து இப்பெருமானரது திருத்துடை மீதமர்ந்து சிறிது நாழிகையிருந்து பின்னர்ப் போகுமாம். இதனைக்கண்ட மெய்யன்பர்கள் “இவர் ஒரு தெய்வீகப் பிறவியே” என்று புகழ்ந்து பேசுவார்களாம்.

குறிஞ்சிக்கொல்லை அன்பர் முருகப்பிள்ளை எனுஞ் செல்வர் வேண்டுகோட்கிணங்கி வலயமாதேவியில் எழுந்தருளியிருந்து திருமுட்டப் புராணம் எழுதிவருங்கால் தம் திருமேனி தளர்ந்து அயர்வினால் கவி வரையாமல் நின்ற நாட்களில் ஒரு கோல வராகம் இவர்முன் தோன்றித் திருக்குரல் காட்டுமாம். இதனைக் கண்ணுறும் நம் நாவலர் பிரான் "திருமுட்டத்திறைவனே இவ்வுருவோடு எழுந்தருளின" னென்று கொண்டு ஷ திருமுட்டப் புராணத்துக்குப் பாடல் எழுத ஆரம்பித்ததும் அவ்வுரு மறைந்துவிடுமாம். இஃதெவ்வாறுயினும் எவ்வுருவையும் இறைவன் உருவாகவே கொண்டாடும் இப்பெருமான் பக்கல் இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெறுவதில் வியப்பொன்றுமில்லை.

பிற சமயவாதிகளின் ஆணவத்தைப் போக்கித் தம் சமயத்தின் மேன்மையை விளக்கிக்கொண்டே தலயாத்திரை செய்தருளுங்கால், ஒருநாள் திருவேங்கடத் தெழுந்தருளினர்.

மலைமேற் செல்லும்பொழுது வழிநடுவில் இவர்க்கு விடாய் அதிகரித்தது. அப்பொழுது எங்கும் தண்ணீர் புலப்பட்டிலது. விடாய் மிகுதியால் இப்பெருமான் சிறிது நேரம் சாய்ந்து கண்ணயர்ந்தனர். பிறகு விழித்தெழுந்து நோக்க அவ்விடத்திலேயே ஒரு சிறிய குழியில் நல்ல தீர்த்தமும் நடுவில் ஒரு திருத்துழாய்ச் செடியுங்கண்டு, இஃதப்பன் திருவருளேயெனத் துணிந்து தண்ணீர் பருகி விடாய் தணிந்து, திருவேங்கடத்தான் திருவருளை வியந்து கொண்டாடினர்.

இதனை "நினைமினே திருவேங்கடத்தானை" என்ற கீர்த்தனையில்,

> "பண்டை ராமாநுசற் கன்னத்தை யூட்டினுய்
> பாவி எனக்குப் பருகநீர் காட்டினுய்." என்றும்,

"ஏனே எனக்குன் பக்தி" என்ற கீர்த்தனையில்

> "கால்நடுங்கி விழிசுழன்று கலங்குமெனக் குன்மலைமேற்
> கருதுபுனல் காட்டவில்லையா?" என்றும்,

இவர் தாமேயருளியிருத்தலான் அறியலாம்.

## இவர்காலத்துப் புலவர் பெருமக்கள்

கோமளபுரம் மகாவித்துவான் இராஜகோபாலபிள்ளை

இயற்றமிழாசிரியர் - இ. விசாகப்பெருமாளையர்

முகவை இராமாநுசக் கவிராயர்

புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார்

வித்துவான் பள்ளிகொண்டான்பிள்ளை

திருவாமாத்தூர் திருப்புகழ் சுவாமிகள்

சிதம்பரம் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர்

சிதம்பரம் வடலூர் இராமலிங்க சுவாமிகள்

புலவர்தம் புரவலர், கபித்தலம் துரைசாமி மூப்பனார்

திரிசிரபுரம் வித்வஜ்ஜனசேகரர் கோவிந்தபிள்ளை

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை

முதலியோராவர்.

## இவர் மாணவர்கள்

புவனகிரி ஸ்ரீமத் அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி சுவாமிகள்

புதுவை ஸ்ரீவைஷ்ணவ நம்பிகள்

புதுவை ஸ்ரீ இராமாநுஜதாசர்

அரியாங்குப்பம் ஸ்ரீ திருமழிசைப் பிரான்

காட்டுப்புத்தூர் ஸ்ரீ விஜயராமாநுஜசுவாமி

ஸ்ரீமாந் சடகோபன் பொன்னடி ஏகாங்கிகள்

காஞ்சிபுரம் ஸ்ரீமாந் ஜெகந்நாத ராமாநுஜதாசர்

கோயம்பள்ளி ஸ்ரீமாந் திருநாவீறுடைய பிரான்
,, ,, பராங்குசதாசர்
,, ,, எதிராஜதாசர்

முதலிய அளவற்ற வைணவப் பெருமக்கள் இவர்தம் திருவடி சம்பந்திகளாக விளங்கினர்.

இவருள் முதன்மையுற்றவரும், இந்நாவலர் பெருமானைப் போலவே பலநூல்கள் அருளிச்செய்தும் தமிழ்நாடு முழுதுஞ் சென்று அடியார் குழாங்களோடு கூடி ஆங்காங்கு பக்திப் பரவசமான சொற்பொழிவுகள் நடாத்தி சமயத்தை வளர்த்த பெருஞ் செல்வர்; ப்ரபந்நஜனத் தலைவரென விளங்கிய புவனகிரி ஸ்ரீமத் ***அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி சுவாமி***கள் ஆவர்.

## இறுதிக்காலம்

நம் நாவலர் பெருமான் இங்ஙனம் மிக்க சிறப்போடு அடியார் குழாங்கள் சூழ வீற்றிருந்து, புதுவைமாநகரில் பெருமாள் கோவில் வீதி 37-ஆம் எண்ணுள்ள தம் திருமாளிகையிலேயே தம் 61-ஆவது ஆண்டான விக்ருதி ஆண்டு மாசித் திங்கள் 8-ஆம் நாள் (கி. பி. 1892) புதன்கிழமையன்று முன்கூட்டியே அடியார் திரளுக்குத் தெரிவித்தருளியவண்ணம் மேன்மாடியில் தம் திருவாராதனத் தெம்பிரான் திருமுன்பு கூப்பிய கையினராய்த் திருநாடலங்கரித்தனர்.

திருக்கோவலூர் ஜீயர் சுவாமிகட்கு இச்செய்தி தெரிவிக்க, அந்தச் சுவாமிகளும், ஸ்ரீ பூங்கோவல்தாயார், ஆயனுர் சாத்திக் களைந்த மாலை பரியட்டம் தீர்த்த ப்ரசாதங்களை அனுப்புவித்தருள, சரம கைங்கரியங்களை முறைப்படிசெய்து, மாலை பரியட்ட முதலிய பரிசுகளால் திருமேனியை அலங்கரித்து, சம்ஸ்கார கைங்கர்யங்களைப் பொலிவுற அடியார்கள் நடாத்தினர் என்ப.

இவர்தம் அஸ்தி காஞ்சிபுரத்தில் ஓர் இராமாநுஜ கூடத்தில் வைக்கப்பெற்றுள்ளது.

## திருக்கோயில்கொண் டுள்ளமை

திருச்சிராப்பள்ளி ஜில்லா கரூர் தாலுகா கோயம்பள்ளியில் சில மெய்யன்பர்கள் திருக்கோயிலொன் றெழுப்பி, அதில் இவர்தம் திருவுருச் சமைத்து எழுந்தருளுவித்து நித்திய நைமித்திகங்களிற் குறைவின்றி இன்றளவும் பூசை நடத்தி வருகின்றனர்.

இவ்வாறே கோலார் தங்கவயலிலும் திருக்குலத்தினரால் இவர் கொண்டாடப் பெறுகின்றனர்.

கி. பி. 1925-ல் கிரப்பாளையம் வித்துவான் கோ. சுந்தர ராமாநுஜ ஸ்வாமிகள். பண்ணுருட்டி ச. கேசவுலு நாயுடு, விழமங்கலம் வே, கிருஷ்ணராமாநுஜதாஸர் முதலியோர் பண்ணுருட்டியில், நம் நாவலர் பிரான் திருப்பெயரால் ஒரு வைணவ சபை தோற்றுவித்தார்கள். அதன் சார்பில் ஆண்டு தோறும் பங்குனித் திங்கள் கேட்டை நாளில் நம் நாவலர் பெருமானின் திருநக்ஷத்திர பரிபாலனமும், பல அரிய புலவர்களால் சொற்பொழிவும் நடாத்தப்பெற்று, அச்சபை சிறப்புற்று விளங்குகின்றது.

நம் நாவலர் பெருமான்மீது பல அன்பர்கள் பாடிய தோத்திரப்பாக்கள் அளவில்லன.

இரு பதிகங்கள் உள்ளன.

## முடிவு

"தோன்றிற் புகழொடு தோன்றுக" எனும் திருமொழிக் கிலக்காய்த் தோன்றிப் பரார்த்தம் பொருமல் நாட்டுக்காகப் பாடாதனபட்டுச் சமயத்தையும் தமிழையும் வளர்த்த இப் பெருமானுக்குத் "தலையலாற் கைம்மாறிலேம்".

*காலன் குறுகான் கடும்பிறவி சாராது*
*மாலின் தனிச்சுகத்தின் மன்னிடலாம் — சீலமுறும்*
*பாவமிலா நெஞ்சேநீ பண்பனிரா மாநுசனும்*
*நாவலன்செந் தாமரைத்தாள் நாடு.*

